# பகவத் பாதை

**BAGAVATH PATHAI**

• Volume : 1 • Issue : 11 தமிழ் மாத இதழ் • January 2015 • Annual Subscription Rs. 100/-

• மலர்:1 • இதழ்:11 • ஜனவரி 2015 • வருடச் சந்தா ரூ.100/-



உலக இயக்கத்தில் தவறு கண்டுபிடித்து அதனை நாம் சரி செய்யலாம்.
உடல் இயக்கத்திலுள்ள குறைகளைக் கண்டுபிடித்து நிவர்த்தி செய்யலாம்.
ஆனால் நம் மனோ இயக்கத்தில் மட்டும் சரி-தவறு என்ற பிரிவினை எதுவும் இல்லாது அனைத்தையும் முழுமையாக ஏற்றுக் கொள்ள வேண்டும்.

– ஸ்ரீ பகவத்



## உடல், உள்ளம், உலகம்

(சென்னை மையத்தில் ஜனவரி 1ம் தேதி வழங்கிய புத்தாண்டுச் சிறப்புரை)

உடல், உள்ளம், ஆன்மா என்று இவை மூன்றையும் இணைத்துப் பேசுவார்கள்.

உடல் நமக்குத் தெரிகிறது.

உள்ளம் நமக்குத் தெரிகிறது.

ஆனால் ஆன்மா என்பது நமக்குப் புலப்படாத நிலையிலுள்ள ஆதார அம்சம். அனைத்தும் ஆன்மாவினாலேயே ஏற்பட்ட காரணத்தினால் ஆன்மாவை மட்டும் தனிமைப் படுத்தி அறிய முடியாது.

ஆகவே ஆன்மாவுக்குப் பதிலாக உலகம் என்ற இன்னும் ஓர் அம்சத்தை நாம் எடுத்துப் பார்க்கிறோம்.

இங்கு நாம் உடலை மட்டும் தனிமைப் படுத்தி பார்க்கப் போவதில்லை. அதுபோல், உள்ளத்தையும் உலகத்தையும் தனிமைப்படுத்திப் பார்க்கப் போவதில்லை.

பிறகு நாம் என்ன பார்க்கப் போகிறோம்?

“நாம் நமது உடலோடும், உள்ளத்தோடும், உலகத்தோடும் என்ன வகையான உறவோடும், தொடர்போடும் இருக்கிறோம்? என்பதைப் பார்க்கப் போகிறோம்.

அப்படித் தொடர்பு கொள்ளும் நாம் யார்?

நம்முடைய மனதை தான், நாம் “நாம்” என்று குறிப்பிட்டுள்ளோம்.

நமது உள்ளத்தைதான் “நாம்” என்று குறிப்பிட்டுள்ளோம்.

நமது உள்ளம் – மனது,

எவ்வாறு நம் உடலோடு தொடர்பு கொண்டுள்ளது?

எவ்வாறு உள்ளம் எனும் தன்னோடு தொடர்பு கொண்டுள்ளது?

எவ்வாறு உள்ளம் உலகத்தோடு தொடர்பு கொண்டுள்ளது? – என்பதைத்தான் நாம் இங்கு பார்க்கப் போகிறோம்.

**நாம் நம் உடலோடு எவ்வாறு தொடர்பு கொண்டுள்ளோம்?** இதைப் புரிந்து கொள்வதற்கு உதவியாக 2014 செப்டம்பர், டிசம்பர் மாத இதழ்களில் வெளியான "யோக சிகிச்சை – 2" "இரட்டையர்" ஆகிய கட்டுரைகளையும் கவனத்தில் எடுத்துக் கொள்ளுமாறு வேண்டுகிறேன்.

“இரட்டையர்” கட்டுரையில் என்ன பார்த்தோம்?

நடக்கமுடியாத முடவர் ஒருவரை, திடகாத்திரமான ஒருவர் தூக்கிச் சுமக்கிறார். முடவருக்கு கண்பார்வை உண்டு. அவரை சுமப்பவருக்கு பார்வை கிடையாது.

இவர்கள் இருவரும் யார்?

முடவர்தான் நமது அறிவு அல்லது புத்தி. குருடர்தான் நம்முடைய இயல்பு அல்லது அடிமனம். நம்முடைய அடிமனம் சக்தி மிகுந்ததாக இருந்தாலும் அதற்கு அறிவு கிடையாது. என்ன செய்ய வேண்டும் என்ன செய்யக் கூடாது என்ற அறிவு கிடையாது. முடவராக இருக்கும் அறிவுக்கு சக்தி கிடையாது. ஆனாலும் அதனுடைய வழிகாட்டலுக்கு ஏற்பவே நம் அடிமனதானது நம் செயலுக்கான ஆர்வத்தையும் சக்தியையும் வெளிப்படுத்துகின்றது.

நமக்கு ஏற்படும் இன்பம் துன்பம் போன்ற மனோ அனுபவங்கள் யாவும் இத்தகைய வெளிப்பாடுகளே. இங்கு நாம் செய்ய வேண்டுவது என்ன? உடலை பொறுத்த அளவில் நமது அணுகுமுறை எவ்வாறு இருக்க வேண்டும்?

நம்முடைய அறிவு எப்படிப் புரிந்து கொண்டு என்ன விதமான முடிவுக்கு வருகிறதோ அதற்கேற்ற வகைகளிலேயே நம் அடிமானது, உணர்ச்சிகளை வெளிப்படுத்துகிறது. நம் அறிவு சுட்டிக் காட்டும் செய்திக்கு ஏற்ப – முடிவுக்கு ஏற்ப நம் அடிமனதானது உணர்ச்சிகளை வெளிப்படுத்துகிறது. நம் அடிமனதானது, இயற்கையானது; கள்ளங்கபட மற்றது. ஆனால் சக்தி மிகுந்தது.

நமது அறிவின் வழிகாட்டலுக்கு ஏற்றபடி அது அமைதி உணர்வை வெளிப்படுத்தலாம்; மகிழ்ச்சியை வெளிப்படுத்தலாம்; துயரத்தை வெளிப்படுத்தலாம் பயத்தை வெளிப்படுத்தலாம்; பதட்டத்தை வெளிப்படுத்தலாம். இப்படி எத்தனையோ விதமான மன அனுபவங்களை வெளிப்படுத்தலாம்.

ஆரோக்கியமான உடலானது, தான் இருப்பது தெரியாமல் இயங்குகிறது. இயங்குவது தெரியாமல் அது இயங்கினாலும், அதுவும் சில அறிவியல் நுட்பத்தோடு இயங்குகின்றது.

கண்ணில் ஒரு தூசு விழுந்து விடுகிறது; நமது நாசியில் தேவையற்ற தூசுகள் நுழைந்து விடுகின்றன. இப்போது என்ன ஏற்படுகிறது? கண்ணில் கண்ணீர் சுரக்கிறது. மூக்கில் தும்மல் ஏற்படுகின்றது. கண்ணீர் சுரப்பதும், தும்மல் ஏற்படுவதும் ஒருவிதமான உபாதைதான். ஆனால் இந்த உபாதைகள் சில தேவைகளின் நிமித்தமாக ஏற்பட்டுள்ளன.

கண்ணிலும், நாசியிலும் நுழைந்த தூசுகளை அப்புறப் படுத்தும் நோக்கத்தில்தான் இந்த உபாதைகள் ஏற்பட்டுள்ளன. நமக்குத் தெரியும்படியாக இப்படி தூசுகள் நுழைந்ததால் அதனால் ஏற்பட்ட உபாதைகளை நாம் சுலபமாக ஏற்றுக் கொள்கிறோம்.

இப்படி வெளிப்படையாகத் தெரியாத நிலையில் நமக்கு புலப்படாத ஏதோ ஒரு நோய்க்கிருமி நமது உடலில் நுழைந்துவிட்டது என வைத்துக் கொள்வோம். தூசியை அப்புறப்படுத்துவது போல், நோய்க்கிருமியை அப்புறப்படுத்தவும் நமது உடலானது ஏதாவது ஒருவிதமான உபாதையை ஏற்படுத்தும். அந்த உபாதையையே நாம் ஒரு நோயாக எண்ணிக் கொள்வோமேயானால் என்ன ஏற்படும்? நோய் ஏற்பட்டுவிட்டதோ என நமது அறிவு-முடவர் சந்தேகப்பட்டு ஒரு முடிவுக்கு வருவாரேயானால் என்ன நடக்கும்?

நமது அடிமனம்- குருடர் பயத்தையும், பதட்டத்தையும் வெளிப்படுத்தி விடுவார். பயத்தினாலும், பதட்டத்தினாலும், தேவையற்ற இரசாயனங்கள் நமது உடலில் சுரந்து அவையும் நமது இரத்தத்தில் கலந்துவிடும்.

பிறகு அவற்றை அப்புறப் படுத்துவதற்காகவும் நமது உடல் போராட வேண்டியது ஏற்பட்டு விடுகின்றது.

"நமது உடலில் ஏற்படும் உபாதைகள் அனைத்தும் நன்மை செய்யும் நோக்கத்துடன் உருவாக்கப்பட்டுள்ளன" என்ற உண்மையை நமது அறிவானது புரிந்து கொள்ளும் போது என்ன ஏற்படுகிறது?

நம் அடிமனது இந்நிலையில் பதட்டமடைவதில்லை. நமக்கு ஏற்பட்ட உபாதைகளை அங்கீகரிக்கும் உணர்வையே அது வெளிப்படுத்துகிறது.

இதனால், நமது உடலில் ஏற்படும் நோய்களை நீக்க, நமது உடல் எடுத்துக் கொள்ளும் முயற்சிகள் அனைத்துக்கும் நம் உள்ளமும் ஒத்துழைப்பு கொடுத்து நம் உள்ளமானது, நமது உடலோடு ஒரு நல்லுறவை ஏற்படுத்திக் கொள்கிறது.

இதனால் நமது உடலானது மீண்டும் சமநிலைக்கு வருவது சுலபமாகிறது. நாம் நமது உடலோடு இவ்வாறு உறவு கொள்கிறோம்.

**இந்த உலகத்தோடு நாம் எவ்வாறு உறவு கொள்வது?** ஆகாமிய கர்மா என்ற நூலில் நாம் நமது கர்மா பற்றிய பலவிதமான கருத்துக்களையும் விவாதித்திருந்தோம்.

"அரசன் அன்று கொல்வான்; தெய்வம் நின்று கொல்லும்."

– இப்படி ஒரு பழமொழி உண்டு.

இருவரையும் கொலையாளிகளாகக் காட்டுகிறது இந்தப் பழமொழி.

அரசன் ஏன் கொலை செய்கிறான்? நீதியையும், தர்மத்தையும் காத்திட அதனை மீறுபவர்களை அரசன் கொல்லுகிறான்.

தெய்வம் ஏன் கொலை செய்கிறது, யாரை கொலை செய்கிறது?

அரசன் தண்டிப்பது – அரசாங்கம் தண்டிப்பது, வெளிப்படையாகத் தெரிகிறது.

குற்றம் புரிந்த குற்றவாளியை நீதிமன்றத்தின் முன்பு நிறுத்துகிறோம்.

குற்றவாளியின் குற்றத்துக்குத் தகுந்த தண்டனை வழங்கப்படுகிறது.

குற்றவாளியும், தான் செய்த குற்றத்தை, குற்றம் எனத் தெரிந்துதான் செய்கிறான். தண்டனை கிடைக்கும்போதும் அவன் தனது குற்றத்துக்கான தண்டனை என்பதைப் புரிந்து கொள்கிறான்; ஏற்றுக் கொள்கிறான். செய்யாத குற்றத்துக்காக அவன் தண்டிக்கப்படுவானே- யானால் அவன் ஆத்திரங் கொண்டு விடுவான்.

குற்றவாளிகளையும் பார்க்கிறோம்; அவர்களுக்குக் கொடுக்கப்படும் தண்டனையையும் பார்க்கிறோம். ஏதோ ஒரு வகையில் சமுதாயத்தின் கட்டுக்கோப்பு காப்பாற்றப்படுகிறது. ஆனால் குற்றம் செய்தவர்கள், குற்றச் செயல்களிலிருந்து விடுபட்டவர்களாக மாறிவிட்டார்களா?

குற்றவாளிகள் தங்களது குற்றங்களை அதிகரித்துக் கொண்டேதான் இருக்கிறார்கள்.

இதுதான் அரசு செய்யும் தர்மபரிபாலனம்.

தெய்வத்தின் தர்மபரிபாலனம்தான் கர்மாவாகவும், கர்ம பலனுமாக உள்ளது.

அது எப்படிச் செயல்படுகிறது?

நாம் நல்ல கர்மாக்கள் செய்திருப்போமேயானால் நமக்கு நல்ல விதமான பலன்கள் கிடைக்கும். நாம் மோசமான கர்மாக்களில் ஈடுபட்டிருந்தோமேயானால் மோசமான பலன்கள்தான் நமக்குக் கிடைக்கும்.

இதை நிர்வாகம் செய்வதுதான் தெய்வம் என்று கூறப்படுகிறது.

சரி எனக்கு ஒரு துன்பமான நிகழ்வு ஏற்படுகிறது என்று வைத்துக் கொள்வோம். அதன் காரணம் என்ன என்பது எனக்குத் தெரியுமா? எனக்கு ஏற்படும் விளைவு மட்டுந்தான் எனக்குத் தெரியுமே தவிர அதற்கான நேரடிக் காரணம் எதுவும் எனக்குத் தெரியாது.

என்ன தவறு செய்தற்காக எனக்கு இந்த துன்பம் வந்துள்ளது என்பது தெரியாத பட்சத்தில் நான் என்னுடைய தவறான செயல்களை எப்படி மாற்றிக் கொள்வது?

ஓர் உதாரணம். நீங்கள் வெளியூருக்குச் செல்ல இரயிலில் முன்பதிவு செய்திருக்கிறீர்கள். இரயில் நிலையத்துக்கு முன் கூட்டியே வருவதற்கு முயன்றும் உங்களால் வர முடியவில்லை. ஆனாலும் இரயில் புறப்படுவதற்கு ஒரு நிமிடத்துக்கு முன்பே இரயில் பெட்டியின் அருகில் வந்து விட்டீர்கள்.

ஆனால் அங்கே வேறு ஒரு காட்சி அரங்கேறிக் கொண்டிருக்கிறது. உங்கள் அரசாங்கத்தின் அமைச்சர் ஒருவர் அந்தப் பெட்டியில் ஏறிக்கொண்டிருக்கிறார். மாலை மரியாதைகளுடன் அவரைப் பெட்டிக்குள் அழைத்துச் செல்கிறார்கள். காவலர்கள் தேவையற்ற கூட்டத்தைக் கலைக்கிறார்கள். அந்தக் கூட்ட நெரிசலின் காரணமாக உங்களால் இரயிலில் ஏற முடியவில்லை. இரயிலும் கிளம்பிச்

சென்று விட்டது. நீங்கள் வேகமாக போக வேண்டிய அலுவல் முக்கியமானதாக உள்ள காரணத்தால் அடுத்து புறப்பட்ட அடுத்த இரயிலில் முன்பதிவு செய்யப்படாத பெட்டியில் உட்காரக் கூட இடம் இல்லாமல் கஷ்டத்துடன் பயணத்தை மேற்கொள்கிறீர்கள்.

அமைச்சருக்கு வரவேற்பு கிடைக்கிறது; உங்களுக்கு புறக்கணிப்பு தான் கிடைக்கிறது.

இதற்கு என்ன காரணம்?

கர்மாதான் காரணமாக இருக்க முடியும்.

அமைச்சர் முற்பிறவியில் செய்திருந்த நற்கர்மத்தின் காரணமாக அவர் இத்தகைய வரவேற்பைப் பெற்று விடுகிறார். நீங்கள் உங்களது மோசமான கர்மாவின் காரணமாக இப்பிறவியில் துன்பமான அனுபவங்களை இவ்வாறு அடைந்திருக்கின்றீர்கள். உதாரணம் இன்னும் தொடர்கிறது.

தவற விட்ட வண்டியைத் தொடர்ந்து அடுத்த வண்டியில் ஒரு மணி நேரம் தாமதமாக நீங்களும் பின் தொடர்ந்து வருகிறீர்கள். நின்று கொண்டே பயணித்த உங்களுடைய கதையைக் கேட்ட சிலர் தங்களுடைய இருக்கையை உங்களுக்கு தர முன்வருகிறார்கள்.

நடு இரவில் உங்களுடைய வண்டி ஏதோ நிலையத்தில் தேவையில்லாமல் நிறுத்தப்படுகிறது. விசாரிக்கும் போது தெரிகிறது:

நீங்கள் தவற விட்ட வண்டியை தீவிரவாதிகள் குண்டு வைத்து தகர்த்துவிட்டார்கள், நீங்கள் பயணிக்கயிருந்த பெட்டியில் இருந்தவர்கள் மந்திரி உட்பட அனைவரும் படுகாயம் அடைந்து விட்டார்கள்.

மீண்டும் பழைய கேள்விக்கு வருவோம்.

மந்திரிக்கு கொடுக்கப்பட்ட வரவேற்புக்குக் காரணம் என்ன?

நல்ல கர்மாவா? உங்களை துரத்தியடித்ததன் காரணமென்ன? மோசமான கர்மாவா? உங்களைத் துரத்தியடித்தது நல்லதா? அல்லது கெட்டதா?

நம்முடைய வாழ்க்கையில் நாம் பலவிதமான நிகழ்வுகளை சந்திக்கிறோம்.

சில நிகழ்வுகள் மகிழ்ச்சியை ஏற்படுத்துபவைகளாக உள்ளன; சில துயரத்தை ஏற்படுத்துபவைகளாக உள்ளன.

இவற்றுள் எவை நல்லவை; எவை கெட்டவை?

மகிழ்ச்சி ஏற்படும்போது, நாம் நம்மை மறந்துவிடுகிறோம்.

உண்மையில் துன்பங்கள் தாம் நமக்கு சரியான பாதையைக் காட்டும் பாடங்களாக அமைந்துள்ளன. துன்பமே பலரை உயர்வடையச் செய்துள்ளது.

அதற்காக, துன்பம் மட்டுமே சரியானது என்று கூறிவிட முடியுமா?

அப்படியானால்.......................

உண்மையில் எது தான் நல்லது, எது தான் கெட்டது?

எதுதா ன் சரியானது; எது தான் தவறானது?

நமக்கு ஏற்படும் நிகழ்வுகளுக்கு கர்மாதான் காரணம் என்றாலும், அவற்றின் செயல்முறையை நம்மால் சுலபமாகப் புரிந்துகொள்ள முடியாது.

அவற்றின் நிர்வாகம் தெய்வங்களின் கைகளில் உள்ளதாகக் கூறப்படுகிறது.

அந்த தெய்வங்கள், நம்முடைய வாழ்வை நமக்கு சீரமைத்துக் கொடுக்கும் நோக்கத்தில், அந்த கர்ம பலன்களை முறைப்படுத்திக் கொடுப்பதாகவும் கூறப்படுகிறது. இதுவே அறக் கருணை, மறக் கருணை என்றும் கூறப்படுகிறது.

இன்பத்தை வழங்கி நமது நற்செயல்களுக்கு ஊக்கமளிப்பதை அறக்கருணை என்றும்,

துன்பத்தை வழங்கி அதன் மூலம் நம் வாழ்வை நெறிப்படுத்துவதை மறக்கருணை என்றும் கூறப்படுகிறது.

உங்கள் நண்பருடன் நீங்கள் ஒரு காரில் பயணம் செய்கிறீர்கள். உங்கள் நண்பர் ஓட்டுகிறார். நீங்கள் அருகில் அமர்ந்துள்ளீர்கள்.

கார் உங்களுக்கு மிகவும் பரிச்சயமான நகரத்திற்குள் பிரவேசிக்கிறது.

எப்படிச் செல்ல வேண்டும் என்பதை நீங்கள் கூறி வழிகாட்டுகிறீர்கள்.

ஓர் இடத்தில் இடதுபுறம் பிரியும் சாலையினுள் காரைத் திருப்புமாறு கூறுகிறீர்கள். ஆனால் அந்த நண்பர் கவனக் குறைவாக இருந்து, காரை இடதுபுறம் திருப்பாமல், நேராகவே சென்று விடுகிறார்.

இப்போது நீங்கள் என்ன செய்வீர்கள்?

“அட மடையா! இடது பக்கம் திரும்பச் சொன்னால் திரும்பாமல் நேராகப் போகிறாயே உனக்கு என்ன பைத்தியமா?” – என்று அவரிடம் கோபம் கொள்வீர்கள்.

காரை ஓட்டுபவர்களுக்கு வழிகாட்டுவதற்காக GPS கருவி ஒன்று உள்ளது. அதை நீங்கள் இயக்குவீர்களேயானால் அது உங்களுக்குப் போக வேண்டிய பாதையைத் தெரிவித்துக் கொண்டே வரும்.

“50 மீட்டர் தூரத்தில் இடதுபுறமாகத் திரும்புக” என்று அது கூறுவதாக வைத்துக் கொள்வோம்.

அது கூறிய இடத்தில் நீங்கள் அது கூறியபடி இடதுபுறமாகத் திரும்பாமல் நேராக வண்டியைச் செலுத்திவிட்டீர்கள் என வைத்துக் கொள்வோம்.

அந்தக் கருவி இப்போது என்ன செய்யும்? அதன் பேச்சைக் கேட்காமல் செயல்பட்ட உங்களைத் திட்டுமா?

உங்கள் நண்பனைப் போன்று அது உங்களைத் திட்டாது. நீங்கள் தவறான இடத்தில் உங்கள் வண்டியைக் கொண்டு சென்று விட்டாலுங்கூட, நீங்கள் எந்த இடத்தில் இருக்கிறீர்களோ, அங்கிருந்து நீங்கள் எவ்வாறு செயல்பட வேண்டும் என்பதற்கு மட்டுமே வழிகாட்டும்.

இப்படி தெய்வீக சக்திகள் அனைத்தும் ஒரு GPS கருவி போல இருந்து நமக்கு வழிகாட்டி வருவதாகக் கூறப்படுகிறது.

இப்படிக் கூறும் பெரியவர்களின் கூற்றை உண்மை என்றே நாம் எடுத்துக் கொள்ளலாம்.

இதன்மூலம், வாழ்க்கை நிகழ்வுகள் அனைத்தும் – அது இன்பமாயினும் சரி, துன்பமாயினும் சரி,

– நம்மை வழி நடத்து வதற்காகவே வந்துள்ளன.

– இப்படி அவற்றை நாம் எடுத்துக் கொள்வதுதான் சரியான அணுகுமுறை.

நடக்கும்போது நாம் கால் இடறிக் கீழே விழுந்து விடுகிறோம்.

இதை நாம் எப்படி எடுத்துக் கொள்ள வேண்டும்?

“இறைவன் நம்மைக் கீழே தள்ளிவிட்டான். அவன் தூக்கி விடும் வரை அப்படியே படுத்துக்கிடப்பது தான் சரி”

– என்று ஏற்றுக் கொள்ள வேண்டுமா?

இடறி விழாமல் எவ்வாறு நடக்க வேண்டும் என்பதைத்தான் இங்கு நாம் கற்றுக் கொள்ள வேண்டும்.

– இப்படி நாம் சந்திக்கும் சூழ்நிலைகளை,

அவை இறைவனால் அல்லது கர்மாவினால் ஏற்பட்டாலும் சரி,

அல்லது இயற்கையாகவே ஏற்பட்டிருந்தாலும் சரி,

அவற்றை நல்லவிதமாக எடுத்துப் பயன்படுத்திக் கொள்ள வேண்டுவது மட்டுமே

– நாம் செய்ய வேண்டுவது.

உடலோடு நாம் எவ்வாறு உறவு கொள்வது,

உலகத்தோடு நாம் எவ்வாறு உறவு கொள்வது,

– என்பதைப் பார்த்தோம்.

**நாம் நம் மனதோடு எவ்வாறு உறவு கொள்வது?**

நாம் செய்யும் தொழிலில் ஒரு சிக்கல் ஏற்படுகிறது. இது போல் நம் உடலில் ஒரு நோய் ஏற்படுகிறது.

இதனால் நம் மனதில் ஓர் அழுத்தமும், வருத்தமும் ஏற்படுகிறது.

இப்படி ஏற்படுவது தான் சரியானது.

இப்படி ஏற்பட்டால்தான் தொழிலையும், உடலையும் சரி செய்ய நாம் முயல்வோம். மற்றபடி,

நாம் நம் மனதை அதனளவில் எப்படி வைத்துக் கொள்ள வேண்டும்?

அதை நாம் எப்படியும் வைத்துக் கொள்ளத் தேவையில்லை.

அதை இயல்பாகவும், சுதந்திரமாகவும் இயங்குவதற்கு அனுமதிப்பது ஒன்றே

– நாம் நம் மனதுடன் உறவு கொள்ளும் முறை.

உலக இயக்கத்தில் தவறு கண்டுபிடித்து அதனை நாம் சரிசெய்யலாம்.

உடல் இயக்கத்திலுள்ள குறையைக் கண்டுபிடித்து நிவர்த்தி செய்யலாம்.

ஆனால் நம் மனோ இயக்கத்தில் மட்டும் சரி–தவறு என்ற பிரிவினை எதுவும் இல்லாது

அனைத்தையும் முழுமையாக ஏற்றுக் கொள்ள வேண்டும். ★

## ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்

நமது பகவத் பாதையில் பயணித்துக் கொண்டிருக்கும் உங்கள் அனைவருக்கும் புத்தாண்டு நல்வாழ்த்துக்களையும் பொங்கல் நல்வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்கின்றோம்.

உண்மையில் நமக்கு ஒவ்வொரு நாளும் புதிய நாளே... ஒவ்வொரு கணமும் புதிய கணமே”

கணந்தோரும் நமக்கு தோன்றும் எண்ணங்களும் உணர்வுகளும் புதிது புதிதே..

இங்கு “நமக்கு, நாம்” என்பதே, எண்ணங்களும் உணர்வுகளும் தான். எனவே ‘நான்’ என்பதே கணத்துக் கணம் புதிது புதிதாக பிறக்கிறது.

‘நாம் கணத்துக்கு கணம் புதிது புதிதாக பிரவகித்துக் கொண்டிருக்கிறோம்’ என்பதை புரிந்து கொண்டதால் சுய முரண்பாடற்று சுதந்திரமாய் பிரவகித்துக் கொண்டிருக்கிறோம்.

இப்பெரும் பேறு அருளிய நமது பகவத் ஐயா அவர்களுக்கு எப்போதும் நாம் நன்றியுள்ளவர்களாய் இருப்போம்.

இதுவரை நாம் அறிந்த ஞானிகளிலேயே நமது பகவத் ஐயா சற்று மாறுபட்டவர்.

இதுவரை வந்த ஞானிகள் பல உபதேசங்களை நமக்கு கொடுத்திருந்தாலும் கூட மனதைப் பற்றிய முழுமையான புரிதலை நமக்கு கொடுக்கவில்லை. நமது பகவத் ஐயாவின் எளிய அணுகுமுறையால் மனதின் இயக்க உண்மையை தெள்ளத் தெளிவாய் புரிந்து கொண்டோம்.

அவர் பல கடின பயிற்சி முயற்சிகளுக்குப் பிறகு பெற்ற ஞானத்தை நம் அனைவருக்கும் புரிதலின் மூலம் எளிமையாக்கி கொடுத்துவிட்டார்.

நாம் அவரை குருவாகவே அணுகினாலும் அவர் நம்மை சக நண்பனாகவே அணுகியதே இவை அனைத்திற்கும் காரணம்.

தற்போது வெளிநாட்டவர்கள் பலர் திருவண்ணாமலையில் பகவத் ஐயாவை சந்தித்து தங்கள் ஐயம் தெளிந்து தெளிவு பெற்று சென்றிருக்கிறார்கள். மேலும் டிசம்பர் மாதம் 21 மற்றும் 22ம் தேதியில் ஞானமுகாம் ஆங்கிலத்தில் நடைபெற்றது. இதில் கலந்து கொண்ட வெளிநாட்டவர்கள் அனைவரும் மெய்ஞானத் தெளிவு பெற்று அளவற்ற மகிழ்ச்சியோடு திரும்பியுள்ளார்கள். “மேலும் ஒவ்வொரு வருடமும் ஐயா திருவண்ணாமலையில் ஆங்கிலத்தில் ஞானமுகாம் நடத்த வேண்டும், இது எங்களைப் போன்ற வெளிநாட்டவர்களுக்கு பெரிதும் உதவியாக இருக்கும்” என்று தங்களது விருப்பத்தையும் தெரிவித்து சென்றிருக்கிறார்கள்.

ஐயாவின் ஞானப்புரிதல் உலகெங்கும் சென்றடைய வேண்டும். மனிதகுலம் மேன்மை அடைய வேண்டும்.

இது நன்றி உள்ளம் கொண்ட நம் அனைவரின் குறிக்கோளாக இருக்கட்டும்.

ஆசிரியர். K.S. ஜீவமணி
செல் : 97891-65555



சென்னை பகவத் மிஷனில் 25.01.2015 ஞாயிறு மாலை அன்று நடைபெற்ற சத்சங்கத்தில் திரு. Dr. கைலாசம், திரு. சுகுமார், திரு. ஜீவமணி, மற்றும் திரு. சரவணன் அவர்கள் பங்கு பெற்று உரையாற்றியபோது.

## ?கேள்வி பதில்¿

**கேள்வி:** நான் வாழ்க்கையில் ஒரு லட்சியத்துடன் ஓர் இலக்கை அடைய வேண்டும் என விரும்புகிறேன். ஆனால் என்னால் முழுமையாக என்னுடைய இலட்சியத்தில் இறங்க முடியவில்லை. எனக்கு ஆர்வம் இல்லையோ என்று தோன்றுகிறது. மனதளவில் எல்லாவிதமான முயற்சிகளையும் மேற்கொள்கிறேன். ஆனாலும் தீர்வு (result) தான் இன்னும் சரியாக வரவில்லை. என்னுடைய முயற்சி முழுமையாக இல்லையோ என்று தோன்றுகிறது. மனதில் திட்டமிடல் இருக்கிறது. ஆனால் தீர்வுதான் சரியாக கிடைக்கவில்லை. நான் என்னுடைய இலக்கை எப்படி சிறப்புடன் அடைவது?

**பதில்:** நீங்கள் இலக்கை அடைவதற்கான மனோ முயற்சிகளை மட்டுமே மேற்கொள்கிறீர்கள். இன்னமும் செயலில் முழுமையாக இறங்கவில்லை என்பதே உண்மை.

உதாரணமாக நம் நாட்டிலிருந்து ஒருவர் வெளிநாட்டிற்கு பிழைப்புக்காக வேறு வழி இல்லாமல் செல்கிறார் என்று வைத்துக் கொள்வோம். அப்படிச் செல்லும் அந்த நபருக்கு அந்த நாட்டின் மொழி சுத்தமாக தெரியாது. எப்படி அந்த நாட்டில் வாழ்வது என்பது தெரியாது. அந்த நாட்டின் சட்ட திட்டங்கள் என்ன என்பதும் தெரியாது. ஆனாலும் பிழைத்து ஆக வேண்டியதைத் தவிர வேறு எந்த வழியும் அவருக்கு இல்லை. அவர் முதல் 1 மாதத்தில் அடிப்படைத் தேவைகளை எப்படி பெறுவது என்பதையும், 3 முதல் 4 மாதத்தில் ஓர் அளவிற்கு இந்த ஊரில் எங்கு, எப்படி வாழ்வது, சாப்பிடுவது, அடிப்படை சட்டதிட்டங்கள் என்ன என்பதையும் ஓர் அளவிற்குப் புரிந்துகொள்ள முடியும். ஒரு 6 மாதத்திற்கு பிறகு ஒரு அளவிற்கு சிறப்பாக செயல்பட முடியும். அந்த நாட்டின் மொழியில் கூட சக பணியாளர்களுடன் ஓர் அளவிற்கு பேசவும் முடியும்.

இங்கு வெளிநாட்டின் மொழி அறிவு கொஞ்சமும் இல்லாத இந்த நபருக்கு இது எப்படி சாத்தியம் ஆனது. வெளிநாட்டிற்கு சென்று பிழைப்பதை தவிர வேறு வழியில்லை என்று வருகிறபோது அவரால் நிச்சயமாக வாழமுடிகிறது.

பொதுவாக வாழ்வில், ஆர்வம், ஆர்வமின்மை (Attraction, Detraction) என எல்லா செயல்களிலும் உள்ளது. நமக்கு வாழ்வில் ஆர்வமே இல்லாமல் இல்லை. நம்முடைய இலக்கை காட்டிலும் மற்றவற்றில் ஆர்வம் கூடுதலாக இருக்கிறது. நம்முடைய இலக்கை அடைவதற்கு தடையாக உள்ளவற்றின் மீது உள்ள நம் ஆர்வத்தை கொஞ்சம் குறைத்துக் கொண்டு நம்முடைய இலட்சியத்தின் பக்கம் நாமாக ஆர்வத்தை திருப்ப வேண்டும்.

உதாரணமாக நம்முடைய தினசரி வாழ்வில் அரசியல் பேசுவது, ஆன்மீகம் பேசுவது Cell phone-ல் விளையாடுவது Whatsapp பார்ப்பது, Facebook பார்ப்பது, T.V. பார்ப்பது; என பொழுது போக்கிற்கு செலவிடும் நேரத்தை கொஞ்சம் குறைத்துக்கொண்டு, அதாவது ஒரு நாளைக்கு பொழுதுபோக்கிற்காக 5 மணிநேரம் செலவிடுகிறோம் என்றால் அதில் 2 மணிநேரத்தை குறைத்துக்கொண்டு அப்படி குறைத்த அந்த 2 மணிநேரத்தை நம்முடைய அத்தியாவசியமான இலட்சியத்தின் பக்கம் திருப்பினால் போதும்.

இப்படி ஆரம்பத்தில் நமது இலக்கின் பக்கம் 2 மணி நேரம் கூடுதலாக திருப்பும்போது, கொஞ்சம் விருப்பமின்றி தான் இருக்கும். ஆனாலும் நாட்கள் செல்ல செல்ல 2 மணி நேரம் 3 மணி நேரமாக மாறும். நமது இலக்கின் மீதான கவனம் கொஞ்சம் கொஞ்சமாக அதிகரிப்பது நமக்கே தெரியாமல் அதிகரிக்கும். பிறகு கொஞ்ச காலத்தில் இயல்பாகவே நமது ஆர்வம் இலக்கின் பக்கம் திருப்பிவிடும். இப்படி இலக்கின் பக்கம் மட்டும் தான் சிந்திக்க வேண்டும் என்று நம் மனதை கட்டாயப்படுத்தக்கூடாது. இலக்கின் முக்கியத்துவத்தை மனம் புரிந்து கொண்டால் போதும். நாம் நம்முடைய பொழுதுபோக்கு நேரத்தை நமது இலக்கின் பக்கம் திருப்பினால் போதும். நாம் நம்முடைய இலக்கின் பக்கம் கவனம் செலுத்தாமல் இருப்பதற்கு நம்மை வேறு சில விசயங்கள் பிடித்துக்கொண்டு இருப்பது என்பது தான் காரணம்.

உதாரணமாக ஓர் பள்ளி மாணவனுக்கு படிப்பு தான் முக்கியம் என்பது தெரிந்தும் அதன்மேல் ஆர்வம் வருவதில்லை. வெறுப்பும், எதிர்ப்பும் தான் இருக்கிறது. ஆரம்பத்தில் ஒரு பாடத்தை படிக்கும்போது கொஞ்சம் கஷ்டமாக தான் இருக்கும். கொஞ்சம் நன்றாக படித்து புரிந்துகொண்ட பிறகும், அந்தப் பாடத்தை நம்முடையதாக நம் வழியில் புரிந்துகொண்ட பிறகும் அந்த பாடத்தை சக மாணவனுக்கு எடுத்து புரிய வைக்கும் அளவிற்கு மாணவர் தயாராகி விடுகிறார். திரும்ப அந்தப் பாடத்தை எடுத்துப்படிக்க வேண்டிய அவசியம் இருக்காது. ஒரு முறை எடுத்துப் பார்த்தாலே போதும் தாமாகவே வந்துவிடும்.

நம் இலக்கு நம்முடையதாக ஆகாதவரைதான் நாம் அதற்காக முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும். நம்முடைய இலக்கை நோக்கி செயல்பட, செயல்பட நாமே நம்முடைய இலக்காக மாறிவிடுவோம். ஆர்வமும் தன்னாலே ஏற்படும். நமது இலக்கின் மீது ஆர்வத்தை முதலில் நாமாக திரும்ப வேண்டும். பிறகு நமது இலக்கே நம்மை பிடித்துவிடும். அதன்பிறகு பொழுதுபோக்கிற்கான நேரத்தை குறைப்பதை பற்றி எல்லாம் நாம் யோசிக்கத் தேவையில்லை. அதை நம்முடைய இலக்கே பார்த்துக்கொள்ளும்.

உதாரணமாக தண்ணீர் ஒரு பாதை வழியாக ஓடிக்கொண்டு இருக்கிறது. அந்த பாதையில் தண்ணீர் ஓடுவதால் நமக்கு எந்தப் பயனும் இல்லை என்பது நமக்கு தெளிவாக தெரிகிறது. நமக்கு தண்ணீர் தேவையான பக்கம் உண்மையில் ஒரு பள்ளமும் இருக்கிறது. ஆனாலும் அந்த பக்கம் தண்ணீர் வருவதற்கு தடையாக ஒரு சிறிய மண்மேடு உள்ளது. நாம் நம்முடைய முயற்சியினால் அந்த மண் மேட்டை மட்டும் கரைத்துவிட்டால் போதும். அந்த சிறிய மண்மேட்டை கரைக்கும் அளவிற்கு நம்முடைய முயற்சி தேவை. அதன்பிறகு நமக்கு தேவையான பக்கம் தண்ணீர் தானாகவே வந்து விடும். பிறகு தேவையில்லாமல் தண்ணீர் போய்க்கொண்டு இருக்கும் இன்னொரு பக்கம் மெல்ல மெல்ல குறைந்து தேவையான பக்கம் தண்ணீர் தாமாகவே திரும்பிவிடும்.

வாழ்வில் நமக்கு ஆர்வம் இல்லாமல் இல்லை. தேவையான இலக்கின் பக்கம் ஆர்வம் இல்லாமல் நமது பொழுதுபோக்கில் ஆர்வம் போய்க்கொண்டிருக்கிறது. நாம் நம்முடைய முயற்சியினால் ஆர்வத்தை கொஞ்சம், கொஞ்சமாக நமது இலக்கின் பக்கம் தண்ணீரின் பாதையை திசை திருப்புவது போல் திருப்பினால் போதும், பிறகு நம்முடைய ஆர்வம் முழுவதும் இலக்கின் பக்கம் தாமாகவே திரும்பிவிடும். நாம் செய்ய வேண்டியது நமது ஆர்வத்தை நமது இலக்கின் பக்கம் திசை திருப்புவது மட்டுமே.

பள்ளி படிக்கும் குழந்தைகள், பள்ளிப் பாடத்தில் மட்டும் வெறுப்புடன் ஆர்வம் இல்லாமல் இருக்கிறார்கள். மற்றபடி Cell phone-ல் விளையாடுவது Whatsapp பார்ப்பது, Facebook பார்ப்பது, T.V. யில் Cartoon பார்ப்பது, Computer Games விளையாடுவது என அனைத்திலும் ஆர்வமாகத்தான் இருக்கிறார்கள். பள்ளிப் பாடத்தில் மட்டும்தான் ஆர்வம் இல்லை; மற்றபடி வேறு விசயத்தில் ஆர்வமாக தான் இருக்கிறார்கள். நாம் என்ன செய்ய வேண்டும்? இந்த பொழுதுபோக்கு விசயத்திற்கு தடை விதிக்காமல் அதற்கு செலவிடும் நேரத்தை மட்டும் கொஞ்சம் குறைத்தாலே போதும் எஞ்சிய நேரம் தன்னாலே பாடத்தின் பக்கம் திரும்பும். பிறகு பாடத்தில் ஆர்வம் ஏற்படும். ஓர் அளவிற்கு மதிப்பெண் எடுப்பார்கள். பிறகு அவர்களுக்கே அவர்கள் மீது நம்பிக்கை ஏற்படும்.

உதாரணமாக நமது வீட்டில் காலை நேரத்தில் தினமும் "சுப்ரபாதம்" போடுவது வழக்கமான செயல். ஆனால் அந்த சுப்ரபாதத்தை கொஞ்சமும் நாம் காது கொடுத்து கேட்காமல் செய்தித்தாளை படிப்பது, உடற்பயிற்சி செய்வது, மற்றவர்களுடன் நம்மையறியாமல் பேசிக்கொண்டுஇருப்பது, சாப்பிடுவது என அனைத்து செயல்களிலும் ஈடுபடுவோம். ஆனால் சில மாதங்களில் சுப்ரபாதத்தில் அடுத்த சுலோகம் இது என்று நம்முடைய மனம் சொல்கிறது. சில நேரங்களில் சுப்ரபாதத்தோடு சேர்ந்து பாடவும் செய்கிறோம் இல்லையா? இது எப்படி சாத்தியம்! சுப்ரபாதத்தைதான் நாம் மனப்பாடம் செய்யவில்லையே பிறகு எப்படி நம்மால் பாடமுடிந்தது, அடுத்த சுலோகம் இது தான் என்று நமக்கு தெரிகிறது.

கொஞ்சமும் கவனம் செலுத்தாத சுப்ரபாதத்தை தினமும் கேட்கும்போதே இப்படி மனதில் பதிகிறது என்றால் நாமாக கவனத்தை இலக்கின் பக்கம் செலுத்தும்போது நிச்சயம் நல்ல ஆர்வம் தாமாகவே ஏற்படும்.

பொதுவாக பள்ளியில் படிக்கிற மாணவனுக்கு பாடத்தில் ஆர்வமில்லை என்பதும், எனக்கு வேலையில் நல்ல வாய்ப்பே கிடைக்கவில்லை என்பதும் அடிப்படையில் ஒரே விசயம் தான். மாணவன் தன்னுடைய பொழுதுபோக்கு நேரத்தை கொஞ்சம் குறைத்துக்கொண்டு பாடத்தின் பக்கம் திரும்ப வேண்டும். வேலையில் சரியான வாய்ப்பு கிடைக்கவில்லை என்று கூறுபவரும் தன்னுடைய பொழுதுபோக்கு நேரத்தை கொஞ்சம் குறைத்து தன்னுடைய வேலையில் கவனம் செலுத்தினால் போதும். மாற்றம் நிச்சயம் ஏற்படும்.

நமது சாப்பாடு தட்டில் இனிப்பு, அப்பளம், ஊறுகாய், சாம்பார், குழம்பு, ரசம், பொரியல் என எல்லாம் வைக்கப்பட்டுள்ளது. இதில் சாப்பாடு, குழம்பு தான் பிரதானம். அதுதான் நமது இலக்கு. அப்பளம், ஊறுகாய், இனிப்பு எல்லாம் சாப்பாடு சிறக்க வேண்டும் என்பதற்காக சேர்க்கப்பட்டவை. அவைகள் நமது பொழுதுபோக்குகள். மேற்சொன்னவை எவையும் இல்லாமல் வெறும் சாப்பாடு, குழம்பு மட்டுமே நம்மால் சாப்பிட முடியும். ஆனால் வெறும் அப்பளம், இனிப்பு, ஊறுகாய் போன்றவற்றை சாப்பாடாக சாப்பிட முடியாது என்பது தான் உண்மை.

இதுபோல் நமது இலக்கின் முக்கியத்துவத்தை மனம் புரிந்துகொண்டால் போதும். நமக்கு எப்போதெல்லாம் இலக்கின் கவனம் வருகிறதோ அப்போதெல்லாம் நமது இலக்கின் பக்கம் செயல்பட்டால் போதும் நிச்சயம் நாம் நமது இலக்கை அடைவோம். நமது இலக்கே நம் இலக்கை அடைவதற்கான திட்டமிடல்களை (Planning) எல்லாம் தாமாகவே உருவாக்கிவிடும்.

"நம்முடைய மனத்திற்கு நன்றாக தெரிகிறபோது எல்லாம் நாம் நமது இலக்கின் பக்கம் கவனம் செலுத்தினால் போதும்."

**V.A.P. சரவணன்** சேலம்.
செல் : 99942-05880

## சத்சங்கம்

சென்னை ஸ்ரீ பகவத் மிஷன் மையத்தில் ஒவ்வொரு வாரமும் ஞாயிற்றுக்கிழமை மாலை 5-30 மணி முதல் 7-00 மணி வரை ஐயாவின் கருத்துகளில் ஈடுபாடு கொண்ட அன்பர்கள் கூடி சத்சங்கம் நடைபெற்றுக் கொண்டு வருகிறது . வாய்ப்புள்ள அன்பர்கள் கலந்து கொண்டு பயனடைய அழைக்கிறோம்.

இப்படிக்கு

ஸ்ரீ பகவத் மிஷன், சென்னை மையம்,
23/10, பழைய பரோடா வங்கி தெரு, செக்ரட்ரியேட் காலனி, அம்பத்தூர், சென்னை- 600053.
செல்: 9884097438, 9381019479, 9444756744

ஐயாவின் அனைத்து நூல்களும் இங்கு கிடைக்கும்.

# பகவத் பாதை சந்தா விபரம்

பகவத் மாத இதழுக்கு சந்தா செலுத்த விரும்புபவர்கள் கீழ்காணும் ஏதேனும் ஒரு வழியில் செலுத்தலாம்.

ஓர் ஆண்டு சந்தா - ரூ. 100/-

ஐந்தாண்டு சந்தா - ரூ. 500/-

ஆயுள் சந்தா - ரூ, 1000/-

சந்தா தொகையை "Sri Bagavath Mission" என்ற பெயரில் M.O. அல்லது சேலத்தில் செல்லத் தக்க D.D. (or) Cheque அனுப்பலாம்.

www.paravaagam.org என்ற இணைய தளத்தில் Credit Card / Debit Card மூலமாகவும் சந்தா செலுத்தலாம்.

வங்கி கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் HDFC Bank-ல் Sri Bagavath Mission A/c No. 15907620000075, NEFTIFSC: HDFC 0001590 என்ற கணக்கல் செலுத்தலாம்.

Bank A/C ல் நேரடியாக செலுத்தியவர்கள் உங்கள் முகவரியை 92620 61838 என்ற எண்ணிற்கு SMS மூலம் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.

# பாதையில் மலர்ந்த மலர்

வணக்கம் ஜீவமணி & சரவணன் அண்ணா,

அய்யாவின் “விருப்பமும் அறிவும்” கட்டுரை வெளிவந்த பகவத் பாதை மாத இதழ் எனக்குள் ஒரு தெளிவை ஏற்படுத்தியதை தங்களுடன் பகிர்ந்துகொள்ள விரும்புகிறேன்.

நான் இந்தியா மற்றும் துபாயில் கணினித்துறையில் கடந்த ஆறு ஆண்டுகளாக வேலை செய்துகொண்டு இருக்கிறேன். அய்யாவின் ஞானம் பற்றிய புத்தகங்களைப் பற்றி திரு. ஹீலர் பாஸ்கர் அவர்களின் மூலம் தெரிந்து கொண்டேன். அய்யாவின் புத்தகங்களை படித்ததால் மனதில் தெளிவு ஏற்பட்டது. அந்தத் தெளிவு எனக்கு நன்கு புரிந்தாலும் எனக்குள் ஒரு சிறு குழப்பம் இருந்து கொண்டே இருந்தது.

நான் வேலை செய்யும் பொழுதும், அல்லது விடுமுறையின் பொழுதும் எனக்குள் பல எண்ணங்கள் எழுந்து கொண்டே இருக்கும். எதையாவது எனது மனம் செய்யும்படி கூறிக்கொண்டே இருக்கும். அதை நான் மனக்குழப்பங்கள் என்று எண்ணிக் கொண்டு இருந்தேன். அய்யாவின் அறிவுரைப்படி அந்த எண்ணங்களை கையில் எடுக்காமல் விட்டு விடுவேன். அப்படி செய்யும் பொழுது எனக்குள் ஒரு சிறு பயமும் ஏற்படும். இப்படி அனைத்து எண்ணங்களையும் எடுக்காமல் விட்டுவிட்டால் நான் எதுவும் செய்யாமலே இருந்து விடுவேனோ என்ற பயம் இருந்தது.

அப்போது தான் அய்யாவின் “விருப்பமும் அறிவும்” கட்டுரையை படித்தேன். படித்த உடன் எனக்குள் இருந்த சிறுகுழப்பத்துக்கு தீர்வு வந்ததை உணர்ந்தேன். பல முறை திரும்பத் திரும்ப படித்த பின்பு மனதானது நமக்கு இருக்கும் அல்லது கிடைக்கும் அனைத்து வாய்ப்புகளையும் காட்டக் கூடிய கருவி என்று நன்கு உணர்ந்தேன். அதைத்தான் இத்தனை நாட்களாக நான் மனக்குழப்பங்கள் என்று எண்ணிக் கொண்டேன் என்ற உண்மை புரிந்தது. இப்போது மனதின் வேலையும் அறிவின் வேலையும் நன்கு உணர்ந்தேன். எனது எண்ணங்களை குழப்பமாக நினைக்காமல் அதில் தேவையானவற்றை மட்டும் எடுத்து செயல்படும் போது தேவையில்லாத எண்ணங்கள் தாமாகவே மறைந்து, எனது எண்ணங்களும் ஒழுங்குபடுவதை உணரமுடிகிறது. அலுவலகத்தில் ஒரு வேலை செய்துகொண்டு இருக்கும்போதே மனதானது அடுத்து அடுத்து செய்ய வேண்டிய வேலையை எடுத்துக்காட்டும். அதையெல்லாம் தேவையற்ற குழப்பங்கள் என்று எண்ணாமல் அதில் முக்கியமானதை எடுத்து செய்ய முற்படும்பொழுது மிக சுலபமாக வேலை முடிவதோடு மனநிறைவையும் தருகிறது.

**“மனதைப் பின்பற்றி அறிவு செல்லும்போது அறிவும் பலமற்றுப் போய்விடுகின்றது.**

**மனமும் விருப்பங்களும் அறிவைப் பின்பற்றி செல்லும்போது இரண்டுமே பலமடைந்து செயல்களில் வெற்றியும் விருப்பத்துக்குரிய சூழ்நிலையை ஏற்படுத்துகின்றன”**

உண்மையை உணர்த்திய வரிகள்.

அய்யா மற்றும் தங்களுக்கும் என்னுடைய மனமார்ந்த நன்றிகள் மற்றும் வாழ்த்துக்கள்.

இப்படிக்கு,

**முபாரிஸ்,** துபாய்

தொலைபேசி: +971 529086970

# விட்டு விடுதலை

ஜென் கதை

இளைஞன் ஒருவன் தன்னுடைய கடந்த காலத்தில் நடந்த பாதித்த சம்பவத்தை நினைத்து நினைத்து வருந்தினான். அந்த சம்பவத்திலிருந்து மீள்வதற்காக எல்லாவிதமான ஆன்மீகப் பயிற்சி, முயற்சிகளையும் மேற்கொண்டான். ஆனாலும் அவனால் மனஅமைதி மட்டும் அடைய முடியவில்லை. இந்த நிலையில்தான் தன்னை உணர்ந்த ஓர் ஞானியை சந்தித்து தன்னுடைய நிலையை எடுத்துக் கூறினான். "இதிலிருந்து மீள்வதற்கு நீங்கள் தான் எப்படியாவது உதவ வேண்டும்" என மன்றாடினான். ஞானி பொறுமையாக இளைஞன் கூறுவதை உள்வாங்கினார். "எத்தனை ஆண்டு காலமாக இப்படி மன பாதிப்புடன் இருக்கிறாய் என்றார் " ஞானி.

இளைஞன், "கிட்டத்தட்ட 5 ஆண்டுகள் இருக்கும். நானும் எல்லாவிதமான ஆன்மீகப் பயிற்சி, முயற்சிகளை எல்லாம் மேற்கொண்டேன். ஆனாலும் எதிலும் மனஅமைதி மட்டும் இன்னும் கிடைத்த பாடு இல்லை" என்றான்.

"அப்படியா!" என்று கூறிவிட்டு அவனோடு சற்று நேரம் உரையாடிக் கொண்டிருந்த ஞானி. உரையாடலுக்கு இடையே அருமையான நகைச்சுவை ஒன்றை கூறினார்.

அதைக்கேட்ட இளைஞன் விழுந்து, விழுந்து சிரித்தான். ஞானி தனது பேச்சுக்கிடையே மீண்டும் மறுமுறை அதே பழைய நகைச்சுவையை கூறினார்.
இந்த முறை மிக குறைவாக சிரித்தான் இளைஞன்.
ஞானி தனது பேச்சுக்கிடையே மீண்டும் ஒரு முறை அதே பழைய நகைச்சுவையை கூறினார்.

அதைக்கேட்ட இளைஞன் கொஞ்சமும் சிரிக்காமல் அப்படியே ஞானியை பார்த்தான்.

"முதல்முறை நகைச்சுவையை கேட்டு நன்றாக சிரித்த நீ இப்போது மட்டும் ஏன், உன்னால் சிரிக்க முடியவில்லை" என்றார் ஞானி.

"முதன்முதலில் அந்த நகைச்சுவையை நான் இதுவரை கேட்டதில்லை. அதனால் சிரித்தேன். ஆனால் இப்போது அதே நகைச்சுவையை திரும்ப கேட்ட பிறகும் எப்படி என்னால் பழையபடி திரும்ப திரும்ப சிரிக்க முடியும். மேலும் எனக்கு தான் அது தெரிந்த ஒன்றாகி விட்டதே" என்றான் இளைஞன்.

"அப்படியா! அப்படி என்றால் நீ மட்டும் ஏன் எப்போதோ நடந்த பழைய சம்பவத்தை திரும்ப திரும்ப நினைத்துக் கொண்டு இப்படி வருத்தப்படுகிறாய்" என்றார் ஞானி.

"அதுதான் சாமி எனக்கு புரியவில்லை" என்றான் இளைஞன்.

"உனக்குளு; தெரிந்த நகைச்சுவையான பிறகு உன்னால் சிரிக்கமுடியவில்லை. அதுபோல உன்னுடைய மனதின் கவனத்திற்கு எப்போது எல்லாம் அந்த பழைய பாதித்த சம்பவம் ஞாபகத்திற்கு வருகிறதோ அப்போது எல்லாம் நீ வருத்தப்படாமல் இருக்கலாம் இல்லையா?" என்றார் ஞானி.

"ஆமாம் என்னையும் மீறி வருத்தம் வந்து விடுகிறது. என்ன செய்வது" என்றான் இளைஞன்.

உன் கவனத்திற்கு தெரிந்த பிறகு விட்டுவிடலாம் இல்லையா? என்றார் ஞானி.

"விட்டுவிட முடியும்" என்றான் இளைஞன்.

"நம்மால் செய்ய முடிந்தது அது மட்டும் தான். உனது கவனத்திற்கு தெரியாமல் நீ வருத்தப்படுவதற்கு நீ எப்படி பொறுப்பாளி ஆக முடியும். உனது கவனத்திற்கு தெரியாமல் வருத்தப்படும் இடத்தில் 'நீயே' இல்லையே. எப்போது உனது கவனத்திற்கு தெரிகிறதோ அப்போது தான் நீ விழிப்புடன் செயல்பட வாய்ப்பு உள்ளது" என்றார் ஞானி.

''அப்படி என்றால் என்னுடைய கவனத்திற்கு தெரியும்போது தான் விழிப்பு எனக்கு ஏற்பட தொடங்குகிறது. அதன் பிறகு தான் என்னால் புத்தியுடன் செயல்பட முடியும். அப்படிதானே சாமி என்றான்" இளைஞன்.

"ஆமாம், நமக்கு தெரியும்போது நாம் விடுபட்டால் போதும். வாழ்க்கையில் நாம் எதிர்கொள்ளும் எல்லா பிரச்சினைகளுக்கும் இந்த ஒரே சூத்திரம் (Formula) தான்" என்றார் ஞானி.

"மிக நன்றாக புரிகிறது சாமி. இப்படி எனக்கு நன்றாகத் தெரியும்போது மட்டும் நான் அதிலிருந்து விடுபட்டால் போதும் அப்படி தானே சாமி?" என்றான் இளைஞன்.

"ஆமாம். எப்போது எல்லாம் உனக்கு தெரிகிறதோ அப்போது எல்லாம் நீ அதிலிருந்து விடுபட்டால் போதும். இதனால் முதலில் நீ உன்னை ஏற்றுக் கொள்வாய். பிறகு எல்லாவற்றையும் ஏற்றுக்கொள்வாய். இதற்கு முன்பாக வருத்தப்பட்டதற்கு நீ காரணம் இல்லை. உன்னைப் பாதித்த சம்பவங்களின் நினைவுகள் தாம் உனக்கே தெரியாமல் போராடி, உன்னை பலவீனப்படுத்தி விட்டன" என்றார் ஞானி.

''என்னுடைய பல வருட மன பாதிப்பு இந்த புரிதலினால் கணப்பொழுதில் நீங்கியது'' என்றான் இளைஞன்.

"நமக்கு தெரியும் போது விடுபட்டால் போதும்".

ஜென் கதை - "விட்டு விடுதலை"



**Registration Number of the News Paper TNTAM/2014/57698**

*If undelivered please return to:*




Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.

**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**

www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555